உ

சிவமயம்



# சேவூர் முத்துகுமாரசுவாமி வரலாறு



வெளியீடு — 1994

முருகப் பெருமானின் போர்ப்படைத் தளபதிகள்
வீரபாகு உள்ளிட்ட செங்குந்த கைக்கோள நவவீரர்கள்



வீரதீர செங்குந்தர் வீராந்தக செங்குந்தர் வீரமார்த்தாண்ட செங்குந்தர் வீரராக்கத்த செங்குந்தர் வீரபாகு செங்குந்தர் வீரகேசரி செங்குந்தர் வீரமகேந்திர செங்குந்தர் வீரமகேசுவர செங்குந்தர் வீரபுராந்தக செங்குந்தர்

செங்குந்தர் வரலாறு மீட்பு குழு

78269 80901



website: https://senguntharmudaliarhistory.blogspot.com/

# இது என் தொடக்கவுரை...

கொங்குநாட்டு வரலாற்றில் சேவூரான செம்பியன் கிழானடி நல்லூருக்குத் தலைமையான இடமுண்டு. கரூர், திருச் செங்கோடு, தாராபுரம், பேரூர் ஆகிய ஊர்களுக்கு இணையான பெருமை இருப்பினும் சேவூரின் சிறப்புக்கள் இருளில் மறைந்-திருக்கிறது. ஆராய்ச்சியின் மூலமாக அதற்கு ஒளியூட்டவேண்டும் இவ்வூர்ப் பெருமக்களுக்கு இதில் பெருமுயற்சி வேண்டப்-படுகின்றது.

கொங்குநாட்டை ஆண்ட அனைத்து அரச மரபுகளும் சேவூரை முதன்மையாக வைத்திருந்தன கங்கர்கள், ஒய்சளர்கள், கொங்குச்சோழர்கள், பாண்டியர்கள், விசய நகரத்தார்கள், மைசூர் உடையார்கள் ஆகியோருடைய கல்வெட்டுக்கள் இவ்வூரில் மிகுதியும் காணப்படுவதே இதற்குக் காரணமாகும்.

வரலாற்றின் தொடக்கக் காலத்திய தொல் பழங்குடி-மக்களின் புதைகுழிகள், முதுமக்கள் தாழிகள் பெருங்கல் வட்டம் [Megalithic sites] ஆகியவை சுமார் 2000 ஆண்டுகளுக்கு முந்தைய வரலாற்றை அறிவிக்கும் வரலாற்று மூலங்கள் ஆகும்.

கங்கர்களின் துணைத்தலை நகராகச் சேவூர் இருந்ததை அறிஞர் பூங்குன்றன் அவர்கள் கூறியுள்ளது வெறும் கற்பனையோ, ஊகமோ அல்ல. சோழர்காலத்திய கோட்டை இருந்ததும் அதிகாரிகள் இருந்து ஆட்சிசெய்ததும் நாம் அறியாததல்ல.

சோழர் பாண்டியர்களின் பொருளாதார மேம்பாட்டிற்கு இங்கு காசுகளை அச்சடிக்கும் அச்சகசாலை இருந்ததை மேலும் ஒளி கூட்டிப்பார்த்து ஆராயவேண்டும். இவ்வூர் எல்லையில் நடுகற்கள் [Hero Stones] இருப்பது இவ்வூரில் வாழ்ந்த வீரப்பரம்பரையின் எச்சங்களாகும்.

கபாலீஸ்வரர் ஆலயமும் அக்கசாலீஸ்வரர் ஆலயமும் வீர-சைவர்களுக்கான சிவன்கோயிலும், சுந்தரபாண்டிய விண்ண-கரமும், குளத்தின் அடிவாரத்தில் உள்ள ஐயனார் கோயிலும் சைவ வைணவ சமய வரலாற்றுக்குக் கண்ணிமைகளாகும் தற்போதுள்ள குளத்தின் கிழக்கு ஓரத்தில் காணப்படும் கருடகம்பம் அங்கு ஏதோ ஒரு பெரிய கோயில் இருந்ததற்கான அடையாள-மாகும். அக்கோயில் காணப்பெறாதது நம் தீவினையே ஆகும்.

இவைகளைத் தொட்டுக் காட்டியிருக்கிறேன், உங்களைச் சிந்திக்க வைக்க. யாரோ இதனைச் செய்யட்டுமே! என்ற எண்ணம் நம் மாட்டாமையைப் புலப்படுத்திப் பழி சேர்த்து விடும் அனைவரும் சாதி சமய வேறுபாட்டை விட்டு முயற்சி மேற்-கொண்டால் நம்முடைய பெருமையை நாம் காத்துக்கொண்ட பெருமை கிடைக்குமன்றோ?

இவ்வூரில் வாழ்ந்து கழுத்தலகு பாய்ச்சி வீடுபேறடைந்த ஒரு யோகியின் கதைச் சுருக்கமும், அதற்கு அடிப்படையான செப்பேட்டு வாசகமும் அச்சேறி உங்கள் கரங்களில் தவழ்கின்றது

செங்குந்தர்களுக்கு ஒரு வீரவரலாறு உண்டு. முத்துக்குமரர் இம்மரபில் தோன்றிய ஒரு வீரயோகி; ஒரு வீரசைவர். அவரிட்ட சாபத்தாலோ ஊர்மக்களின் நீண்ட உறக்கத்தாலோ நம்பூர்வீக வரலாறு இருண்டு கிடக்கிறது.

முத்துக்குமரன் நடுகல் அழகுநாச்சியம்மன் கோயிலின் வாசலில் உள்ளது. இக்கோயில் மற்ற கோயில்களுக்கும் முந்தையது. இங்கு காணப்படும் துவார பாலிகைகள் சிற்பங்கள் மிகப்பழமையானவை. அங்காளம்மன், மாரியம்மன் கோயில்கள் புதுவடிவம் பெற்றுள்ளன. இக்கோயில்கள் சேவூரில் சக்திவழி-பாடு சக்தி உபாசகர்கள் வாழ்ந்ததற்கான அடையாளங்கள் முத்துக்குமரர் வீரசைவர் மட்டுமன்றிச் சக்தி உபாசகராகவும் சிறந்திருந்தார். அவரைப்போன்ற வீரசைவர்களும் சக்தி உபாச-கர்களும் காலப்போக்கில் அருகிப்போய் விட்டனர். எனவே, தந்திர வாதக் கோட்பாடுகள் இங்குமறைந் தொழிந்தது போலும்.

இன்று ஒரு திருப்புமுனை நிகழ்கின்றது, முத்துக்குமரன் பற்றிய சிறுகுறிப்பில் பிறசெய்திகளை விரிவாக எழுதமுடிய-வில்லை. ஆர்வமுள்ளவர்கள் ஒன்றாகத்திரள வேண்டும்; மன இருந்தால் மார்க்கமுண்டு.

முத்துக்குமரன் பற்றி எழுதவும் பேசவும் ஆர்வத்துடன் அமரருள் வைகும். இரத்தின முதலியார் அவர்கள் பன்முறை முயன்றார். இன்று அது நிறைவேற முதற்படிக்கல்லைப் போட்டி-ருக்கிறோம். அவர் ஆன்மா உறுதியாகச் சாந்திபெறும். திரு. இரத்தின முதலியார் குமாரன் இர. குமரேசன் எம்.ஏ;எம்எட்; அவர்கள் தந்தையின் அடிச்சுவட்டைத் தொடர்ந்து செயலாற்ற முன் வந்ததைப் பாராட்டுகிறேன். பேராசிரியர் டாக்டர் கி. நாச்சிமுத்து எம்.ஏ;பி.எச்டி;அவர்கள் (கேரளப் பல்கலைக்கழகம் திருவனந்தபுரம்) இச்செப்பேட்டைப்படி எடுத்துக் குறிப்புரையுடன் வழங்கியிருக்கிறார் அவருக்குப் பெரிதும் நன்றி பாராட்டுகின்றோம் இப்பட்டயத்தையும் பூசைப்பெட்டி வாள்கத்தி ஆகியவற்றையும் கண்போலக் காத்துவரும் பட்டக்காரர். வி. துரைசாமி அவர்களைப் போற்ற வேண்டும்.

இச்சிறு புத்தகம் அச்சாகி முத்துக்குமரன் புகழ்பரவ ஆர்வம் கொண்ட வணக்கத்துக்குரிய எங்கள் அண்ணார். சேவூர் நாட்டாண்மை பி. அங்கப்ப முதலியார் அவர்கள் பெரிதும் பாராட்டுக்குரியவர்.

செங்குந்த இளைஞரணி இம் முயற்சியில் பெரிதும் அயராது உழைப்பது கண்டு களிப்பெய்துகிறேன்.

அனைவருக்கும் எளியேன் வணக்கங்களும் வாழ்த்துக்களும்

அன்பன்,
**டாக்டர். மா. கணேசன்** எம்.ஏ;பி.டி;பி.எச்டி;
கல்வெட்டு ஆய்வாளர், **அவிநாசி.**

# நன்றியுரை.

P. அங்கப்பன்,
அறங்காவலர்
ஸ்ரீ வாலீஸ்வரர் மற்றும் கல்யாண
வெங்கட்டரமணசுவாமி திருக்கோவில்கள்
**சேவூர்.**

சேவூர் யோகி அருள்சித்தர் முத்துக்குமாரசுவாமி அவர்கள் வரலாறு வெளிவருகிறது. இவ்வரலாற்றுக் குறிப்பைத் தொகுத்து வைத்து எழுதிய சேவூர் திரு. **A. இரத்தினவேல் முதலியார்** அவர்களுக்கும், இப்புத்தகத்தில் வெளிவந்துள்ள முத்துக்குமார சுவாமியின் விருத்தங்களைச் சேர்த்து வைத்திருந்து உதவிய சேவூர் திரு. **குழந்தைவேல் முதலியார்,** கொளப்பலூர் திரு. **அருணாசல முதலியார்.** அவர்களுக்கும் என் நன்றியும் வணக்கமும்.

முத்துக்குமார சுவாமியின் வீரவரலாற்றையும் விருத்தங்களையும் பிழை நீக்கி அச்சிட உதவிய உயர்திரு பேராசிரியர் டாக்டர். **மா கணேசன்** M.A., B.T., Ph.D.. கல்வெட்டு ஆய்வாளர் அவிநாசி, செப்புப்பட்டையம் பற்றிய ஆய்வுக் குறிப்புகளைக் கொடுத்து உதவிய பேராசிரியர் டாக்டர் திரு. **K. நரச்சிமுத்து** M.A., Ph.D., கேரளப்பல்கலைக் கழகம் திருவனந்தபுரம் அவர்களுக்கும் என் நன்றியும் வணக்கமும் இவ்வரலாற்றுப் புத்தகத்தை வழங்குபவர் ஷெ வரலாறு எழுதிய திரு. **A. இரத்தினவேல் முதலியார்** அவர்களின் மகன் **R. குமரேசன்** M.A ,M.Ed.. சேவூர். அனைவரும் நலம்பலபெற அருள்மிகு அழகுநாச்சியம்மன், யோகி முத்துக்குமாரசுவாமி திருவடிகளை வேண்டி வணங்குகிறேன்.

முத்துக்குமாரசுவாமியின் வீரவரலாறு என்ற புத்தகம் இளைஞர் முதல் முதியோர்வரை படித்துப் பயனடையும் வகையில் அமைந்துள்ளது. எனவே நம் சமுதாய இளைஞர்கள் தெரிந்து கொள்ளவேண்டும் என்பதற்காகவே வெளியிடப்படுகிறது.

சேவூர்,
7-12-94

**வணக்கம் !**

அன்புள்ள,
**P. அங்கப்பன்**

# முன்னுரை.

காஞ்சிமாநகரில் செங்குந்தர் இனத்தில் தோன்றிய, கொங்குநாட்டில், "மாட்டூர்" என வழங்கப்பட்ட சேவூரில், சமாதியடைந்த முத்துக்குமரனுடைய வாழ்க்கை வரலாறு அனைவராலும் அறியப்பட வேண்டிய ஒன்றாகும். பெரியோருடைய வாழ்க்கை முறை இப்பிறவிக்கடலில் துன்புறும் ஆன்மாக்களுக்கு வழிகாட்டும் கலங்கரை விளக்கம்.

அவ்வகையில் முத்துக்குமரனுடைய வாழ்க்கை நமக்கெல்லாம் நல்வழி காட்டும் என்பது திண்ணம். நாற்பது ஆண்டுகளாகவே முத்துக்குமரனுடைய வரலாற்றை முழுமையாக அறிந்து அதனைப்புத்தகமாக அச்சிட்டு வெளியிட வேண்டும் என்னும் அவா என்னுள் இருந்து வந்துள்ளது. அரிதின் முயன்று பல்வேறு செய்திகளை செங்குந்தசமூகத்தைச் சார்ந்த பெரியவர்களின் மூலமும், முத்துக்குமரனுடைய விருத்தங்களிலிருந்தும், பட்டக்காரரிடம் உள்ள பட்டயத்திலிருந்தும் கொளப்பலூர் திரு. அருணாசல முதலியார் அவர்கள் வாயிலாகவும் தொகுத்து வைத்திருந்தேன் அவற்றை பேராசிரியர் டாக்டர். மா.கணேசன் M.A.B.T.Ph.D., அவர்கள் முறையாகத் தொகுத்து நூல்வடிவிலும் ஆக்கியுள்ளார். தமிழ்கூறும் நல்லுலகு இதனை வரவேற்கும் என்பதில் கிஞ்சிற்றும் ஐயமில்லை.

மாரியம்மன் கோவில் வீதி,<br>சேவூர்.<br>9-12-1986

அன்பன்,<br>அ. இரத்தினவேல்.

## பதிப்புரை

ஒரு நாட்டுக்கு வரலாறு இன்றியமையாதது அதுபோலவே ஓர் இனத்துக்கும் வரலாறு இன்றியமையாதது. 'செங்குந்தர்' இனத்திற்கும் வீரம் செறிந்த ஒரு வரலாறு உண்டு. மூவேந்தரின் படைகளில் 'குந்தம்' என்னும் படைக்கருவியைக் கரங்களிலேந்தி படைவீரர்களாயும், படைத்தளகர்த்தர்களாயும் படைமுன் சென்று அநீதியை அழித்து, நீதியை நிலைநாட்டத் தன் இன்னுயிரையும் ஈந்த வீரமிகு மறவர்களின் மரபின் வந்த பெருமைமிகு இனம் 'செங்குந்தர்' இனம்.

இவ்வினத்தின் வீரவரலாற்றின் ஓர் அத்தியாயமே, சேவூர் மண்ணில் வாழ்ந்து. சமாதியடைந்த முத்துக்குமரனின் வாழ்க்கை வரலாறு. ஒரு மகான் வாழ்ந்து நிறைந்திருக்கும் பெருமை மிக்கது சேவூர். முத்துக்குமரனின் வாழ்க்கை புராணக் கதையல்ல, ஒரு யோகி இவ்வுலகில் ஆன்மபலத்தின் மூலம் எவற்றையெல்லாம் சாதிக்க முடியும் என்பதைக் காட்டியதற்கான நடைமுறைச்சான்று

அவர் வாழ்க்கையில் நடைபெற்ற சில நிகழ்ச்சிகளைப் பல்வேறு அறிஞர் பெருமக்களுடன் அளவளாவியும், விருத்தப் பாடல்களிலிருந்தும், சோழன் பூர்வ பட்டயத்திலிருந்தும் நினைவில் வாழும் எம் தந்தை திருமிகு. அ ரத்தினவேல் அவர்கள் அரிதின் முயன்று திரட்டி ஒரு சிறுநூலாக உருவாக்கினார். கல்வெட்டு ஆய்வாளர் முனைவர் **மா. கணேசன்** எம்.ஏ; பி.டி; பி.எச்.டி; அவர்கள் இம்முயற்சிக்குப் பெரிதும் உதவியுள்ளார். சேவூர் செப்பேடு, திருவனந்தபுரம், கேரளப்பல்கலைக்கழகம் பேராசிரியர் முனைவர். **கி. நாச்சிமுத்து** எம்.ஏ;பி.எச்.டி; அவர்கள் படியெடுத்து குறிப்புரையுடன் வழங்கியுள்ளார். அதனை இந்நூலின் இணைப்பாக வெளியிடுகின்றோம். சேவூர் பற்றிய செய்திகளை அறிந்து கொள்ள இது துணைபுரிவதாக உள்ளது.

# முத்துக்குமார சுவாமியின் வரலாறு

## முன்னுரை :

கொங்கு நாட்டை 18-ஆம் நூற்றாண்டில் விசயநகர அரசர் ஆனைகுந்திராயரின் (கி.பி. 1741) காரியப்பிரதானராகிய மைசூர் சிக்கதேவராசுடையார், கொங்கு தாராபுரத்தைத் தலைநகராகக் கொண்டு ஆண்டு வந்தபோது, கணுவாய்க்குக் கிழக்கே உள்ள பகுதியாகிய முகாசி ஆறுநாடு சேவூரை ஸ்ரீ வெங்கடராயர் ஆண்டார். இந்த கால கட்டத்தில் சேவூரில் சிவஞானச் செல்வ ராகிய முத்துக் குமாரசுவாமி என்பவர் வாழ்ந்து பல அற்புதங்களை நிகழ்த்தினார்.

## முத்துக்குமார சுவாமியின் பூர்வீகம் :

தொண்டை நாட்டின் தலைநகராகிய காஞ்சி மாநகரில் செங்குந்த மரபினர் வாழ்ந்து வருகின்றார்கள் அம்மரபில் கந்தப்ப முதலியார் மகன் சரவண முதலியார், அவர் மகன் சக்திவேல் முதலியார், அவர் மகன் ஈஸ்வர முதலியார், அவர் மகன் காஞ்சி முதலியார், அவர் மகன் அண்ணாமலை முதலியார் என்பவர் செங்குந்தற்குரிய நெசவுத் தொழில் செய்து வாழ்ந்து வந்தார். அவர் காஞ்சிபுரம் காமாட்சியம்மனிடம் நிறைந்த பக்தி உடையவர் உண்ணாமுலையம்மை என்ற நங்கையை இல்லறத் துணைவியாக ஏற்று, இல்லறமாகிய நல்லறத்தை வள்ளுவர் காட்டிய வழியில் நடத்தி வந்தார்.

இறைவன் திருவருளால் உண்ணாமுலையம்மை திருவயிறு வாய்த்து முத்துக்குமரன் என்ற மகனையும் சண்முகவல்லி என்ற மகளையும் பெற்று பெருமகிழ்வோடு நிறைவாழ்வு வாழ்ந்தனர் இம் முத்துக் குமரனாகிய மகன் காஞ்சி காமாட்சியிடமும், முருக. பெருமானிடமும் அளவில்லாத பக்திகொண்டு விளங்கினார். அப்பொழுது அவருக்கு வயது இருபத்திமூன்று இல்லறத்தை ஏற்க

வேண்டிய இவ்வயதில் அவர் இறைவனைக்காண வேண்டும் என்ற அவாவோடு எப்பொழுதும் இறைவழிபாட்டிலேயே இருந்தார்.

தொண்டை நாட்டில் கடும் பஞ்சம் ஏற்பட்டது. அண்ணா-மலை முதலியார் குடும்பத்தினர் அவ்வூரில் வளத்தோடு வாழ முடியாத நிலைமை ஏற்பட்டது. தம் முன்னோர்கள் கொங்கு நாட்டில் ஆறு நூற்றாண்டுகளுக்கு முன்பே சென்று குடியேறி அங்கு சிறக்க வாழ்வதை அறிந்து தாமும் அக்கொங்கு நாட்டில் குடியேற விரும்பி குடும்பத்தோடு புறப்பட்டு வந்து ஈரோட்டுக்கு அருகில் உள்ள வெள்ளோட்டில் குடியமர்ந்தார். முத்துக்குமரனாகிய மகன் நெசவுத் தொழிலைச் செம்மையாகச் செய்ததோடு அருகே உள்ள தலங்களுக்கெல்லாம் சென்று இறைவனை வணங்கி வந்தார்.

## தவளகிரியில் முத்துக்குமரர் :

கொங்கு நாட்டுத்தலங்களை வழிபட்டபின் முத்துக்குமரர் தவளகிரிக்குச் சென்று தங்கியிருந்தார் அங்கு எழுந்தருளியிருந்த முருகனை வழிபட்டு அருள்பெற்று அவ்வூரில் பல சித்துக்களைச் செய்து காண்பித்தார். அவ்வூர் மக்கள் இவரைப் பித்தரோ என்று ஐயங்கொண்டு அவமதித்த வேளையில் அவர் தனது மார்பை கிழித்து குருதியைக்கொட்டி ஆராதனை செய்து காட்டினார். இவ்வூருக்கு அருகே பாயும் ஆற்றின் நீரோட்டத்தைச் செங்குருதி யாகக் காட்டி, பின் தூய நீராக ஓடும்படியும் செய்து காட்டினார். இந்த அற்புதங்களைக் கண்ட பிறகு பலர் இவர்களுடைய சீடர்-களாயினர் அவர்களில் செல்லாண்டி, குப்பமுத்து என்னும் சீடர்கள் குறிப்பிடத்தக்கவர்கள். தம் சீடர் கூட்டத்தோடு அவர் பல தலங்களை நோக்கிச் சென்று கொண்டிருந்தார்.

3

## மைசூரில் முத்துக்குமரர் :

மைசூர் அரசை அப்பொழுது சிக்கதேவராய உடையார் என்பவர் ஆண்டு வந்தார். மைசூரை அடுத்த ஒரு கிராமத்தில் ஒரு வேங்கை அடிக்கடி தாக்கி மக்களைக் கொன்று ஒழித்தது. அக் கொடிய வேங்கை வாழ்ந்த காட்டை யாருமே நெருங்க அஞ்சி-னார்கள். அங்கு எழுந்தருளியிருந்த முத்துக்குமரர் அவ்வூர் மக்கள் பால் அருள்கொண்டு அக்காட்டிற்குச் சென்று அவ்வேங்கையை தன் கை வாளால் வெட்டி வீழ்த்தினார் இச்செய்தி கேட்ட மைசூர் மன்னன் பெருமகிழ்ச்சி கொண்டு முத்துக்குமரரை அரசவைக்கு அழைத்து அவருக்கு தக்கஉபசாரங்கள் செய்தார் மேலும் அவரோடு அளவளாவி மகிழ்ந்தார். அவரோடு உரையாடுகின்ற பொழுது முத்துக்குமரர் அவருடைய பேச்சிலும் தோற்றத்திலும் ஒரு வருத்தக் குறியீட்டைக் கண்டார் அவ்வரசர் மக்கட் செல்வம் இல்லாததால் ஏற்பட்ட தன் குறையைத் தவயோகியாகிய முத்துக்குமரரிடம் தெரிவித்தார் அவ்வேந்தர்பால் அருள்கொண்ட முத்துக்குமரர் மஞ்சள் கிழங்கையையும், எலுமிச்சங்கனியையும் மந்திரித்துக் கொடுத்து இவைகள் பட்டத்து அரசியின்பால் சேர்க்க சொன்னார். அடுத்த ஆண்டில் அவ்வேந்தனுக்கு ஓர் ஆண் குழந்தை பிறக்கும் எனவும் அருள் செய்தார் இவைகளால் மனம் மகிழ்ந்த மன்னர் நிறையப் பொற்காசுகளை அவருக்கு பரிசாகக் கொடுத்து அனுப்பி வைத்தார். அப்பொற்காசுகளை பெற்றுக்கொண்ட முத்துக்குமரர் மைசூர் ஆட்சிக்கு உட்பட்ட சேவூருக்கு எழுந்தருளினார்.

## சேவூரில் முத்துக்குமரர்

முத்துக்குமரர் தன் சீடர்களோடு சேவூர் வந்து தன்னுடைய பூசைப் பெட்டியோடு அவ்வூரில் உள்ள அழகு நாச்சியம்மன் கோயிலில் தங்கினார் அவ்வூர் 300 வீடுகளுக்கு பெரியதனக் காரராயிருந்த சிவலிங்க முதலி என்பவரை அழைத்து அவரிடத்தில் மைசூர் மன்னர் கொடுத்த பொற்காசுகளைக் கொடுத்து வைத்தார் தான் வேண்டும் பொழுது அக்காசுகளைத் தப்பாமல் தரவேண்டும் எனவும் கூறியிருந்தார்.

4

சேவூர் அழகு நாச்சியம்மன் கோயில் கபாலீசுவரர் கோயிலுக்கு தெற்கில் அமைந்துள்ளது இக்கோயிலைச் சார்ந்து ஒரு நடுகற்கோயில் முத்துக்குமாரருக்காக எடுக்கப்பட்டிருப்பதை இன்றும் காணலாம் இச் சிவஞானச் செல்வர் பல்வேறு ஞான நூல்களைக் கற்று மற்றவர்களுக்கும் கற்பித்து வாழ்ந்து வந்தார்

ஞானிகள் எதனையும் முன்கூட்டியே அறியும் இயல்பினர் முத்துக்குமாரர் சிறந்த ஞானியாக விளங்கியதனால் தன்னுடைய இறுதிக்காலத்தை அறிந்து வைத்திருந்தார்

ஓடும் செம்பொன்னும் ஒக்கவே நோக்குவார் சிவஞானிகள் என்பது பொருள் பொதிந்த வாக்கு. மன்னவர் தந்த பொன்னை தனக்கென்று எவ்வகையிலும் பயன்படுத்திக் கொள்ளாது தன் அந்திமகாலத்தில் தானம் செய்வதற்காகவே ஒதுக்கிவைத்திருந்தார் உரியகாலம் வந்துசேர்ந்தது முத்துக்குமரர் சேவூருக்கு வடகோடியில் உள்ள முசாபரித் தோட்டத்தில் ஒருபரண் கட்டி அதன் மீது இருந்து தன் உடலை அறுத்து வீசிஎறிந்து சிவகதி பெற நினைத்தார் பெரிய தனக்காரராகிய சிவலிங்கமுதலியாரைக் கூவியழைத்து பொன்னை கொண்டு வரச்சொன்னார் பெரியதனக்காரர் தலைமறைவாகி விட்டார். தன் சீடர்களை அனுப்பிக் கேட்கச் செய்தார். பெரிய தனக்காரர் வீட்டில் இல்லை என்ற பதில் கேட்டு ஆறாச்சினம் கொண்டார். 'பெறல் அரும் திருப்பெற்றபின் சிந்தனை பிரிதாம்' என்ற கம்பர் வாக்குப் பொருள் பொதிந்தது

முத்துக்குமரர் பரண் மீதிருந்து, இப்பெரிய தனக்காரன் ஊருக்கு பெரியவன், உள்ளத்தாள் சிறியவன் ஏழை எளியவர்க்கு என் இறுதிகாலத்தில் தானம் செய்வதற்காக வைத்திருந்த பொற்-காசுகளை கவர்ந்து கொண்ட இவன் ஓடி ஒழிந்துகொண்டான் இவன் குடி கெடுக இம் முன்னூறு வீடும் முப்பது வீடாகி முப்பதும் மூன்றாகிக் கெடக்கடவது என்று சினத்தால் சபித்தார் நிறை மொழி மாந்தர் கூறிய உரைகள் மறை மொழியாகி மெய்ப்பித்தது.

## 5

இம்மாதவச் செல்வர் அவ்வழியாக வந்த குப்பமுத்து முதலியை அழைத்து ஐந்து தேங்காய் வாங்கித் தருமாறு வேண்டினார். அவரும் இவருடைய சொற்களைச் சிரமேற்கொண்டு ஐந்து தேங்காய்களை வாங்கி வந்து வணங்கி கொடுத்தார். தன் இறுதி வேண்டுகோளை நிறைவேற்றிய குப்பமுத்து முதலியைத் தன் மகனாகவே கொண்டு தன்னுடைய பூசைப் பெட்டி முதலிய வழிபாட்டுச் செல்வங்களைக் கொடுத்து எக்காலத்தும் இவைகளை பூசித்துப் பாதுகாத்து வருமாறு கேட்டுக்கொண்டார். அவனும் அவ்வாறு செய்ய இசைந்தான். எல்லாப் பற்றுகளில் இருந்தும் முத்துக்குமரர் விலகி நின்றார் தன் உடல் மட்டுமே பாரமாகப் பட்டது போலும் தன் உடலில் இருந்த சதையைத்தன் கைவாளால் சீவியெடுத்து சுண்டு விரலால் சுண்டி விட்டார், இறுதியில் தன் கைவாளைக் கழுத்தில் அலருபாய்ச்சி சிவலோகம் சென்றடைந்தார்.

### முடிவுரை

தன் தலையைத் தானே அரிந்து கொடுக்கும் செயலை ''நவகண்டம்'' என்று சொல்லுவர். சோழன் பூர்வ பட்டயத்தில் இம்முதலிமார்கள் நவகண்டம் கொடுத்த செய்திகள் கூறப் பட்டுள்ளன. மேலும் மணிமேகலை கலிங்கத்துப்பரணி, தக்கயாகப் -பரணி, கல்வெட்டுக்கள் ஆகியவைகளில் கூறப்பட்டுள்ளன. நவகண்டம் கொடுக்கும் காட்சிகள் அவிநாசியிலும், பெரிய பாளையத்திலும், நீலம்பூரிலும் சிலைகளாக காட்சி தருகின்றன.

முத்துக்குமரர் சிவகதி அடைந்த பின்னர் முசாபரித் தோட்டத்தில் ஒரு குகை தோண்டி அவருடைய பூதஉடலை சமாதி வைத்தனர். இச்சமாதி சாவான் சமாதி என அழைக்கப்படுகிறது. வீரவாழ்வு வாழ்ந்தவர்கள் தெய்வமாகிறார்கள். அவர்களைத் தமிழர்கள் நடுகல்லாக நிறுத்தி பெயரும் புகழும் கருதி வழிபட்டு வருகின்றனர் முத்துக்குமரருடைய நடுகல் சிற்பம் சேவூர் அழகு நாச்சியம்மன் கோயில் முன்றிலில் உள்ளது.

ஒவ்வொரு ஆண்டும் மார்கழி மாதம் திருவாதிரைக்கு அடுத்த நாள் புனர்பூச நட்சத்திரத்தில் செங்குந்தர் இனத்தைச் சார்ந்தவர்கள் முத்துக்குமரருக்கு விழா எடுக்கிறார்கள் அவர் பயன்படுத்திய பூசைப்பேழையையும், வாளும், வலம்புரிச் சங்குகளும் இந்நாளில் காட்சிக்கு வைக்கப் படுகிறது. இப்பேழையைப் பட்டக்காரர் வகையறாக்கள் பாதுகாத்து வருகிறார்கள்.

**வாழ்க முத்துக்குமரர் நாமம்!**

## முத்துக்குமாரசுவாமி-விருத்தங்கள்

செங்குந்த கைகோள முதலிமார்கள் காமாட்சியம்மன் பண்டிகையின் போதும், முத்துக்குமாரசுவாமி பண்டிகையின் போதும் வீராவேசத்துடன் பல இனிய விருத்தங்களைப் பாடுவார்கள் அவ்விருத்தங்களில் வீரவாகுத்தேவர் முதலிய நவ வீரர்கள் வீரபத்திரர் ஆகியோருடைய பெருமைகளும், காமாட்சியம்மையும் முருகப் பெருமானும் செங்குந்தர்க்கு அருள்பாலித்தது முதலிமார்களின் பெருமைகளும் வீரச் செயல்களும் பேசப்படும் சேவூர் முத்துக்குமரர் விழாவின் போது பாடப்படும் விருத்தங்கள் இன்னும் வாய்மொழி இலக்கியமாகவே விளங்குவதாக அறிகின்றோம் இவ்விருத்தங்களை திருவாளர் அ. இரத்தினவேலுமுதலியார் அவர்கள் (வணிகம் சேவூர்) சேகரித்து வைத்திருந்தார்கள் இவ்விருத்தங்கள் வாய்மொழி அமைப்பிலேயே இருந்ததால் பிழைகள் தோன்றுகின்றன. யாப்பிலக்கண அமைதி இப்பாடல்களில் பொருந்திய வகையில் வெளியிட இயலவில்லை விருத்தங்களை கிடைத்தவாறே பதிப்பித்திருக்கிறோம். திரு. இரத்தினவேலு முதலியார் அவர்கள் முத்துக்குமரரிடத்தில் கொண்டிருந்த அபிமானத்தையும், பக்தியையும் அவர் முயன்று சேகரித்து வைத்திருந்த பல்வேறு செய்திகள் மெய்ப்பிக்கின்றன· அவருக்கு எம் நன்றி!

7

## சேவூர் அழகு நாச்சியம்மன் விருத்தம்

எவரெவர் என்மேல் பகையிட்டு வந்தாலும்-அவரை நான்
எதிரிட்டறுக்க வேண்டும்.
எவ்வேளை நானுன்னை மறந்தாலும் — நீ எந்தன்
பங்கிலிருக்க வேண்டும்.
உயரப்பறக்கலாம், தெய்வலோகம் காணலாம்-உதாரணங்கள்
சொல்லிவரலாம்.
ஆறு லட்சத்து அடிக்கம்பத்திலேறியே எமனைப்பார்த்தும்
பசாரித்து வரலாம்.
ஏழு லட்சம் கொண்ட மதம் பொழிந்த யானையைக் (கண்டு)
கைதட்டி ஓட்டிவரலாம்.
எட்டு லட்சம் கொண்ட அறுபதடி வேங்கையை-பார்த்து நின்று
செயித்து வரலாம்.
ஒன்பது லட்சம் கொண்ட சிங்கத்தின் எதிர் நின்று-சீறி
எட்டி அடித்து வரலாம்.
பத்துலட்சம் கொண்ட சூராதி சூரரைப்-பார்த்து
நின்று செயித்து வரலாம்.

*தாயே உன்சந்நிதியில் தவித்து நான் இருப்பது தர்மமல்ல சற்றாகிலும் கிருபை வைத்து என்னை ஆண்டருள்-கோவையம் பதியின் வாழ்தேவி அழகு நாச்சியே.*

## உ. செங்குந்தர் சிறப்பு :

அந்தமுள்ள கச்சி நகர் அம்மையிரு பாதச்
சிலம்பில் அன்பாய் பிறந்த குந்தம்
ஆதிமுதலாகவும், சைவமுதலாகவும்
ஆகம நெறி விளங்கும் குந்தம்
இந்துமுடி சங்கரர் மகாதேவர் அருளினால்
இனிது முனை பெற்றகுந்தம்

இமையோர்கள் தாபமும் கவலையும் தீரவே
சூரனை எங்கே எங்கே என்று எய்த குந்தம்
மந்தரகிரி நீலகிரி உதயகிரி மகாகிரி
படைத்த குந்தம்
செந்தமிழுக்கு இறங்கியே தன்மக்களின் சிரத்தை அறுத்து
சிரசிம்மாசனம் எய்த குந்தம்
செப்பரிய கச்சிநகர் ஆயிரத்து தொளாயிரம்
செழிக்க வரும் செங்குந்தமே

## 3. அவிநாசி விருத்தம் :

*கலை அரசனைச் சிரசில் அணிகொண்ட புக்கொளிக் கடவுள்*

அவிநாசி லிங்கர் கருணையம்மன்
இரதமேலும் காட்சியுள்ள தரிசனத்தில்
வலையன், வளஞ்சியன், வளையரோடு கவுடர்
சேடர், சாணார், மாந்தளிர் பட்டாடை
வீசியே விடுதிதனில் வந்து கல்விட்டெறிந்த பேரை
விலையில்லா மாணிக்கம் திருமேனி காவலாய்
வீரபத்திர அவதார விசயங்கள் சொல்லி
முடிக்க துறத்தி சிகப்புடன் வெள்ளையும் கொண்டு
மலையரசன் மகள் சுதனை மறவாத தவளகிரி அய்யன்
வலங்கையால் மனத்தில் அடியேன்.

## 4. முத்துக்குமரர் விருத்தம் :

பூலோக தேவேந்திரன் மைசூர் குலாதிபதி
புனித சீரங்கபட்டனம் போரில் விடாத சுவாமி
தளவாய் மதிக்கவரும் புகழும் அப்பாச்சி ராயரும்
மேலான வெங்கிட்டராயரும் அவுதவுது எனப்புகழவே
வட்டமிகு தேசிகர் மாவுத்தரு கண்டு மகிழ

வாய்பாண தவளைமலை வேலனும்
வேலேந்தி மயிலேறி அருகில் வந்து நிற்க
வீர செங்குந்தரும் நாலாவகைப் பேரும்
நன்று நன்று எனப்புகழ சேவூரில் நல்ல பரண் ஏறியே
குலவையிட்டுக் கொண்டு நாகலோகத்தில் ஏறியே
சீரா குபேரா அண்ணாமலைமைந்தன் செல்வ முத்துக்குமரன்
செங்கீரையாடியருளே சித்திரமன்மதரூப
முத்துக்குமார செங்கீரையாடியருளே!

## 5 முத்துக்குமரர் நவகண்டம் தந்தகாலம்

நானிலம் தன்னிலே கலியுக சகாப்தம்
நாலாயிரத்து எண்ணூற்று நாற்பத்திரண்டன் மேல் வந்த
துந்துபி வருசம் நல்ல மார்கழித் திங்களில் ஆன
மூன்றாம் தேதி சுக்கிலபட்சமும்
அதி கீர்த்தியுடனே அன்பான புனர்பூச நட்சத்திரமும்
அழகு பெறும் சுபதினத்தில் வானவர்கள்
சிறை மீட்க கந்தர் துணையாம் வீரவாகு
முதலான ஒன்பது பேரும் வலியழியச்
சூரரை வென்று கச்சியில் அண்ணாமலை மைந்தன்
செல்வமுத்துக் குமரன் செய்ய பூம்பரணேறிற்
தீரமாய்க் கழுத்தவருதான் பாய்ச்சி
சிவலோகம் ஏகினாரே (காலம் கி. பி. 1741)

6.

பூமேவு செங்கடம்பு பெறுமணி மார்பனை
புத்தேழ் கணங்கள் சூழ
மயிலேறி உலகமே வலம்வந்த போதனை
குருநாதனை, காமேவு சக்திமங்கையின்மேவு
முருகனை கந்தனை சம்பந்தனைக்
ககனமுகடளவு வளர்தவளமலை வேலனை
காங்கேயனை யாம் பணிவோம்

10

தேமேவு கச்சிவரும் காமாட்சியம்மன் முன் செய்ய

கருமாரி பாய்ந்த செங்குத்த

குலதிலகனான அண்ணாமலை மைந்தன்

செல்வ முத்துக்குமரன்

தேனுலவு சோலை சேர் சேவை நகர்நன்னில்

செய்ய பரணேறி தீரமாய்க !

கழுத்தலகு பாய்ச்சிச்

சிவலோகம் ஏகினாரே



11

# சேவூர் செப்புப்பட்டயம்

கி. நாச்சிமுத்து

இடம் : கோவை மாவட்டம், அவிநாசிவட்டம்,
சேவூர்கிராமம்.

வைத்திருப்பவர் : சேவூரிலுள்ள பட்டம் மாரிமுத்து
முதலியார் என்பவர்

**ஆண்டு : கலி 4842 துந்தபி வருடம் மார்கழி மாதம் வெள்ளிக்கிழமை 3-ஆம் தேதி ஆங்கில ஆண்டு கி. பி. 1741 டிசம். 3-அல்லது 4 (விவரம் பார்க்க 1-2 குறிப்பு)**

எழுத்து : தமிழ்

மொழி : 18-ஆம் நூற்ருண்டுக் கொங்கு மண்டல மொழி

செய்தி முத்துக்குமாரசாமி என்ற பெயருடைய யோகி ஒருவர் கொங்கு 24 நாடுகளில் ஒன்ருகிய ஆறுநாட்டிலுள்ள சேவூரில் பல அற்புதங்கள் நிகழ்த்தி வாழ்ந்திருந்தார் இவர் காஞ்சிபுரத்தைச் சேர்ந்த அண்ணுமலை முதலி என்பவர் மகன். இவர் முத்துக்குமார நயினர் எனவும் அழைக்கப்பட்டார் இவர் மைசூர் முதலிய இடங்களுக்குச் சென்று அரசரால் சிறப்புகளும் பெற்றுச் சேவூரில் வாழ்ந்திருந்து பின் ஒருநாள் பரண் கட்டி அதன்மேல் ஏறி கழுத்தில் வாளைப் பாய்ச்சி சிவலோகம் ஏகினர். அவர் சேவூரிலுள்ள அழகு நாச்சியம்மன் கோயிலில்தான் வாழ்ந்திருந்தார் அவர் தலையை அரிந்து கொடுத்ததும் அக்காளிக்காதல் வேண்டும் இவ்வாறு காளிக்குத்தலை கொடுக்கும் மரபு மணிமேகலை (6 : 49-53) கலிங்கத்துப் பரணி (4 : 15) தக்கயாகப் பரணி (3 : 44) கல்வெட்டுக்கள் சோழன் பூர்வ பட்டயம் ஆகியவற்றால் தெரிய வருகிறது சேவூரின் வடபுறத்திலுள்ள முசாபரித் தோட்டத்தில் காணப்படும்

இவருடைய சமாதி சாவான் சமாதி என அழைக்கப்படுகிறது. இவருடைய நடுகற் சிற்பம் ஒன்று சேவூர் அழகு நாச்சியம்மன் கோயில் முன்றிலில் சிறு கோவில் கட்டி வைக்கப் பட்டுள்ளது. இவரைப்பற்றிய வரலாறும், கதைகளும் இன்றும் அவ்வூரில் வழங்கி வருகின்றன.

முத்துக்குமாரசாமி சேவூரிலுள்ள குப்பமுத்து முதலி என்பவரை சுவீகாரம் செய்து வளர்த்து வந்தார் இறுதிக்காலத்தில் அவர் தமது சிவபூசை சாமான்களை எல்லாம் குப்பமுத்து முதலியிடம் ஒப்படைத்திருந்தார் அவர் பரம்பரையினரிடம் இன்றும் அப்பொருள் களும்பயன்படுத்திய வாளும் வேறு சில பொருள்களும் இருக்கின்றன இப்பொருள்களையும் இச்செப்பேட்டையும் ஆண்டிற் கொருமுறை சரஸ்வதி பூசையன்று வெளியே எடுத்து சுத்தம் செய்கின்றனர். அவர்களிடம் இச்செப்பேட்டோடு அளவில்சிறிய வேறொருசெப்பேடும் இருப்பதாகத் தெரிகிறது. அதில் இச்செப்பேட்டுச் செய்தியின் சுருக்கம் அடங்கியிருப்பதாகத் தெரிகிறது அச் செப்பேட்டை சரஸ்வதி பூசையன்று தான் வெளியே எடுப்பர் என்பதால் அதைப் பார்க்க முடியவில்லை.

முத்துக்குமாரசுவாமியார் மகன் குப்பமுத்து முதலிக்கும் சில சிறப்புகளைக் கொடுத்ததை இச்செப்பேடு விவரிக்கிறது.

கலி 4842-ல் துந்திபி மார்கழி 2-ஆம் தேதியன்று (1741 டிசம்பர் 2 அல். 3-ல்) விசயநகர அரசர் ஆனைகுந்திராயரின் காரியப் பிரதானராகிய மைசூர் சிக்குதேவராசுடையார் கொங்கு தாராபுரம் சீமையை ஆள்கின்றபோது கணுவாய்க்குங்கீழ் உள்ள சீமையை முகாசி ஆறு நாடு சேவூரில் உள்ள ஸ்ரீ வெங்கட -ராயஸரயர் ஆண்டு வரும் நாளையில், அவரின் கீழ் குமார சோழியாக்கவுண்டர் நீதி செலுத்தும் நாளையில் கைக்கோள முதலி மார்கள் கொங்கு 24 நாடு எழுகரை நாடு ஆகிறவற்றுலுள்ள சமய முதலி பட்டக்காரர் நாட்டாண்மைக்காரர் உறவின் முறையார்

ஆகியவரையும் இடங்கையினர் 9 கம்பளத்தாரையும் கூட்டி குப்பமுத்து முதலிக்கு ராஜாதிபதி மண்டலாதிபதி மடாதிபதி என்று அழைக்கப்படும் வைராபதியப்பட்டம் கொடுத்தனர். பேரூர்களிலும் சிற்றூர்களிலும் உள்ளவர்கள் தேவபூசை நடக்கும்படி வைராபதிக்கு வரியாக தறிக்கு ஒரு பூட்டு நூலும், வந்தவர்களுக்கு உணவும் ஏர்க்கு $\frac{1}{4}$ தராசுக்கும் கால், பட்டறைக்குகால் என்றும் கொடுத்து வரவேண்டும் இத்தர்மம் நீண்டகாலம் நடைபெற வேண்டும் இத்தர்மத்தை அழிப்பார் பாவமும், காப்பார் புண்ணியமும் கூறப்படுகின்றன. இம்முடிவு முத்துக்குமாரசுவாமியார் சிலை முன்பு எடுக்கப்பட்டு இருக்கிறது. இச்சாசனம் இக்கூட்டம் நடந்த அடுத்த நாள் வெள்ளிக்கிழமை திருக்கபாலீஸ்வரர் கோயிலில் எழுதப்பட்டு இருக்கிறது. இவையெல்லாம் திருவாதிரை விழா முடிந்த அடுத்த-டுத்த நாட்களில் நடந்திருக்கின்றன.

## *சிவமயம் கடவுள் துணை*

1 பூவுலகத்திலே கலியுக சகாப்தம் ச ௬அளசய 2ல் துந்திமி
௵ மார்கழி மாசம் ங தேதி சுக்கிர
2 வாரமும் திரிதிகை புனர்பூச நச்செத்திரத்தில் கச்சி
அண்ணமலை முதலிமகன் முத்துக்குமார நயினார் ஆறு நா
3 டு செவூரில் திருப்பரணேரிக் கழுத்தலகு பாச்சிச்
சிவலோக மேகினார் சொற்ஸ்ரீமண் மஹாமண்ட
4 லேஸ்வரன் அரிகாவிபாடன் பரணசுக்குத் தப்பு
வராத கண்டன் மூவராய கண்டன் கண்
5 ட நாடு கொண்டு கொண்ட நாடு கொடாதான்
துலுக்கர் தள (ன) விபாடன் துலுக்கர் மோகந்தவிர்
6 த்தோன் ஒட்டியர்கள் விபாடன் ஒட்டியர்
மோகந் தவிர்த்தோன் ஒட்டியர் துலுக்கரை ஒட்டி
7 வென்றவன் அஷ்டகிரிமட்டும் அரசாளு மன்னவன்
கோஷ்டம் பதினெட்டும் கொண்ட கிரு

8 பாகரன் துஷ்டனுக்கிரகன் சிஷ்டபரிபாலனன்
தன்னுயிர் போல மன்னுயிர்க் கிரங்கு
9 மகாராஜன் அரிவுக்கு அகத்தியன் பொருமைக்
பூமாதேவி குழிர்ச்சிக்குச் சந்திரன்
10 நிதிக்கு குபாரன் வில்லுக்கு விசையன் சொல்லுக்கு
தர்மன் மல்லுக்கு பீமன்.
11 கொடைக்கு கர்ணன் ராஜாதிராஜன் ராஜபரமேஸ்பரன்
ராஜமார்த்தாண்டன் ராஜகெம்
12 பீரன் ராஜ ரணசூரன் தேசமைப்பத்தாரிலும்
ஜெயங் கொண்டவராகிய விசைமா
13 நகரில் ரத்தினச் சிங்காசனத்திற்குக் கா்ரணக்
கா்த்தராகிய நரசிங்கராயா் வீரசந்திர
14 ராயர் விருப்பாச்சிராயர் பிரபுட தேவராயர்
மகா தேவராயர் மல்லிகார்ச்சன ராயர் கி
15 ருஷ்ணராயர் அச்சுதராயர் சதாசிவராயர்
வெங்கிடபதிராயர் சீரங்கராயர் ஆனைகுந்தி
16 ராயர் மனுநீதி விப்ரமும் ஆறிலோரு கடமை
கொண்டு ஒரு குடைக்கு கீழ் ராச்சிய ப
17 ரிபாலனம் பண்ணியருளிய மகாராஜனவர்
களின் காரியப் பிரதானாகிய மைசூரி
18 ல் சாமரசுடையார் கெண்டி வீரராசுடையார்
நரசராசுடையார் தேவராசுடையார்
19 சிக்கு தேவராசுடையார் மகாராஜனவர்கள்
கொங்கு தாரபுரம் சீமையை செங்கோ
20 லச் செலுத்துகின்ற சாலிவாகனன் கலியுகம்
சு சூ அளசுய 2ல் துந்துமி வருஷ
21 கணுவாயுக்குங்கீழ் வகிக்கா நின்ற சீமை
முகாசி ஆறுநாடு சேவூரில் ஸ்ரீ வெங்க
22 டராயரையர் அர்ச்சில் குமாரசோழியாத்
கவுண்டர் நீதி செலுத்துகின்ற நாளில்

23 சுப்ரமண்ய மூர்த்திக்குத் துணைவராகிய
வீரவாகு வீரகேசரி வீரமயேந்திர
24 ன் வீரமயேஸ்பரர் வீரபுரந்தரர் வீரராக்கதா
வீரமார்த்தாண்டர் வீராராந்தகர் வீ
25 ரதீரர் நவவீரராகிய சிவன்மைந்தர் திருமேனி
காவலர் எவ விலங்கிலும் நா
26 விலங்காதவர் பட்டமானம் பழுதாக்
கார்த்தவர் இட்ட பரணேரி யிரங்காதவர்
27 வல்லானை வென்ற வாசி வேளைக்காரர்
பொய்த்தலைக்கு மெய்த்தலை கொடுத்தவர் கஞ்
28 தனனுசர் காமாச்ச வாபுத்திரர் பஞ்சாட்சரம்
பஞ்சவர்ண விருது மஞ்சள் பாவாடையுடை
29 யர் ருத்திராக்ஷ மாலிகாபாரணர் அரிபூசை
குருபூசை மயேஸ்வர பூசையுள்ளவர் லவண்டை
30 மல்லரி முதல் ௲2 வாத்தியம் பெற்றவர்
இரத்தப்பாவாடை சந்திரகாந்திப் பாவாடையும் பெ
31 பஞ்சவர்ணக்குடை பகல் வத்தியுடையவர்
அர்த்தனரிக் குஞ்சமும் ஆயுநம் பெற்றவர் ஆவ
32 டி சேவடி திருவடி பெற்றவர் காஞ்சீபுரத்தில்
கருமாரி நிலை கொண்டவர் சற்சன சுத்தசிவாச்சாரியர்
33 அசுரர் குலைகாலர் செருமுனைகண்டு பின்னிடையாதவர்
சென்றதிசைமுழுதும் வேன்ற தீரர்
34 செங்கை வடிவேலினர் சீர்பாதசேகரர் என்று
மனுநீதி கெடாதவர் செம்பியன் மனமெச்சும் செ
35 ங்குந்த வீரர் தம்பியை மனமொத்த சாதியை
யொழிப்பர் ஈரேழுலகத்திலும் வீராதிவீரர் துஷ்ட நி
36 க்கிரகர் சிஷ்ட பரிபாலனர் பல்லோர்
புகழ்ந்தடப் பட்டணங் கார்த்தவர் சோணாடு காத்த சுகு
37 ண தீரர் வீணாள் கெடாத மெண்மீசையள்ளவர்
சேவல் கொடியுஞ் சிகண்டியுடையவர்

38 வரம்பிலா வமரர் சிறைமீட்டவர் கடம்பமாலை
கமழுமார்பினர் மந்தாரமாலை வாகுடன் பூண்
39 டவர் நமச்சிவாயன் தேவியராகிய நவமாதர்
ஈன்ற ஈருக்ஷ பதின்மரின்றுணைவர் கைலைக
40 ாவலர் கைலாயத்தில் பார்வதி பரமேஸ்பரர்
ஆடையாபரணமும் கைலையங்கிரி மகமேருகிரியை
41 யும் பார்வதி தேவியார் தனது மகனாகிய
வீரவாகு முதல் எருக்ஷ வீரரிடத்தில் ஒப்புவித்து இதுசு (க)
42 ளை யெல்லாங் கைக் கொள்ளுங்க ளென்று
திருவாக்கருளித் தமது திருக்கரத்(த)ால் திருநீடப் பெற்ற
43 து முதல் கைக்கோள முதலிமாரென்று திருநாமம்
பெற்றவர் இரவிபரவிட இல்லசையாதவ
44 ர் புரவலர் புகழும் போர்முக வீரர்
பஞ்சாட்சரப் பரிபூரணர் வீர சிங்காசன மேவிவீற்றிருப்
45 பவர் ஒட்டக்கூத்தரின் ஒப்பில்லாத் தமிழும்
குச் சிரச்சிங்காசனம் மீய்ந்தவர் வணங்காமுடியி
46 னர் கித்தரப் புலிக்கொடி சீராய்ப் பெற்றவர்
வாசியும் விருதும் வண்மையு முடியத்
47 தேச மதிக்கச் செத்துப் பிரந்தவர் வாகிசையு
டனே மகாதேவரைக் கண்டு காஞ்சிபு
48 ரத்திற் கருமாரி பாய்ந்தவர் சென்ற நான்
முகனைச் சிகையை பிடித்தவர் கண்டுவ
49 ளுங் காளிதன் கைத்தாளம் பிடுங்கினோர்
இறப்பதற்கென்று மேங்காத தீரர் நா(ர)
50 ணன்றனது நன்மருகரென சீமணி தாரணி
செப்பிடப் பெற்றியர் மன்மதனி
51 ருந்த பந்திரபுரியை வினவுமுடன் புகுந்து
வெட்டியழித்தவர் வாணிகுருமொழியை
52 மறவாத செங்குந்தர் கோத்திரம் நீடூழி
காலம் வாழி கருமாரிகண்டு கைக்கோளமுதலிமா

53 ராகிய கந்தனருள் பெற்றவர் கொங்கு உசு
நாட்டுச் சமயமுதலி பட்டக்காரர் நாட்டாண்மைக்காரர்
54 உரவின் முறையார் எழுகரை நாட்டுச் சமய
முதலி பட்டக்காரர் நாட்டாண்மைக்காரர்
55 நம்ம இடங்கையார் சூ கம்பளத்தார்கள் எல்லோருங்
கூடி கலி(லி)யுக சகாப்த்தம் சு சூ
56 அளசய 2ல் துந்தமி ஸு மார்கழி மாசம் 2 தேதி
குருவாரமும் புணர்பூச நச்செத்திர
57 மும் சுபநாம யோகமுங்கூடிய சுபதினத்தில்
செம்பியாங்கிழா நாட்டுக்குச் சேர்ந்த
58 சேவூர் ஆறுநாட்டில் கூடி முத்துக்குமாரசாமியாரவர்கள்
மஞ்சள் நிர் குடித்து.
59 வளாதின மகன் குப்பமுத்து முதலிக்கு
முத்துகமோர் நயினார் வர்கள் தமது சிவபூசை
60 முஸதேதி யெல்லாம் ஒப்புவித்துக் கொடுத்து
தமது மகளை நட்டிலே சுத்தி வருகுறப
61 டிக்கு நாடு கூடிகுப்பமுத்து முதலிக்கு
ராஜாரி பதி மண்டலாதிபதி மடாதிபதியென்று
62 விளங்கிய வைராபதியப்பட்டமுங் கொடுத்து
நாட்டிலே வரி நடந்து வருகிறபடிக்
63 கு எழுதிக் கொடுத்து சாசனம தேவ பூசை
நடக்கும் படிக்கு பேரூ ருக்கும் சித்தூருக்கும்
64 உள்பட வைரா பதிவரி பமக்கத் துக்குகவ
ஒரு பூட்டு நூலும் வந்த ஆளகளுக்
65 குப் பரிசார்கமும் இந்தப்படி சம்மதித்து
கொங்கு 2 ச நாட்டார்கள் எழுகரைநா
66 ட்டார்களும் நம்ம இடங்கைர் வகைராக்க
ளும் கூடி முத்துக்குமர நயினார் முன்
67 பாகத்தீர்த்து சந்திர சூரியருள்ள
வரைக்கும் நடந்து வரும்படியாா சேவூர்தி

68 ருக் கவாளிஸ்பரர் சன்னதியில் எழுதியது
ஏறுக்குவ து(ா)க்குவ பட்டனாக்குவ
69 இந்த தர்மததை சந்திர சூரிய
ருள்ள வரைக்கும் மேலக் கண்ட சசலரும் நடத்திவ
70 ருவோமாகவும் இந்த தர்மத்திற்கு யாதா
மொருத்தர் விகாதம பண்ணின போக
71 ள காசி கெங்கையிலே கோதாவரிலே
கன்னியாகுமரியிலே பாவநாசத்திலு
72 ம் திருக்குற்ருலயத்திலும் பிராமணரையும்
யோதீஸ பாரையும் குருக்களையும்
73 தாயத ததைய மையும் காராம் பசுவையும்
கொன்ற தோசத்திலே போக கடவாக
74 ள் இந்த தர்மதத்தைப் பரிபாலனம் பண்ணின
பேர்களுக்கு அஷ்டஐஸ்வரியமும் ஆ
75 யுள் ரோக்கியமும் சந்தான சமுரத்தயும்
தெய்வ பிரசாதமும் குருபிரசாதமும் ராஜபிதா
76 தாபமும் மென்மேலு முண்டாகத்
தகாதக் காமாச்சி தேவியும் சுப்ரமண்ணிய சாமியு
77 ம் முத்துக்குமாரசுவாமியும் கிருபை
செய்து ரட்சிப்பார் சுபம்.

**சேவூர் செப்புப்பட்டயம் என்ற தலைப்பில்**
**கோவை மாவட்டக்கருத்தரங்குக்கு**
**அளிக்கப்பட்ட கட்டுரை**





முத்துக்குமாரசாமி சன்னிதி

மைசூர் மகாராஜா முத்துக்குமாரசாமி சித்தருக்கு 1741ஆம் ஆண்டு செம்பு பட்டயம் எழுதிக் கொடுத்தார்.



சேவூர் செங்குந்தர் செப்பேடு

